# திருநெல்வேலியில்
# திருவருள் பெற்று விளங்கிய
# ஸ்ரீ நெல்லையப்ப பிள்ளையவர்கள் அருளிச்செய்த
# "திருநெல்வேலித் தலபுராணம்"

## கருவூர்ச் சித்தர் சருக்கும்



### கருவூர் சித்தர் திருஅவதாரம்

திருவளர் கீரனூரிற் சிறந்த மாமறையோர் தம்மி
லொரு மறையவன்றன் பன்னியுத்தமி கற்பின் மிக்காள்
கருவுறுமுதரந் தன்னிற் கருதுமேழ் பரித்தேர் வெய்யோ
னருள வந்தவதரித்த வந்தணன் கருவூர்ச் சித்தன்.

வினைவிதி கடந்து மிக்க வேத சாத்திரங்கள் கற்றுத்
தனையறிந் துணர்ந்து தன்னுட்டலைவனைக் கண்டதாலே
யனகநீ யங்குண்டானா லிங்குமுண்டென்றேயார்வங்
கனியுமெய்ஞ்ஞானபோதக் காரணக் கருவூர்ச் சித்தன்

### கருவூர் சித்தர் நெல்லை மாநகர் வருதல்

வெறிமலர் வேதனாலும் விளம்பரிதா மெய்ஞ்ஞானத்
தறிவுடைக் கருவூர்ச் சித்தனமலன் வாழ்தலங்களெல்லாங்
கிறிபடச் சென்று சென்று கேட்ட நல்வரங்கள் பெற்று
நெறியொடு பணிந்து போற்றி நெல்லை மாநகரில் வந்தான்



**நெல்வேலி பெருமான் சன்னிதி வருதல்**

போந்து தண் பொருநைச் சிந்து பூந்துறைப் புனலின் மூழ்கி
வாய்ந்த தங்கருமமுற்றி வரை வனத்திறைவன் கோயி
லாய்ந்த பேரறிவினோடு மகமலர்ந்தன்பாய்ப் போற்றிச்
சார்ந்து பொன்வீதி சூழ்ந்து சன்னிதி முன்பு வந்தான்

**மூன்று முறை அழைத்தல்**

வந்துயர் **கருவூர் சித்தன் வரைவன வரதனார்க்கு**
**சந்தியிலினிய நைவேதனஞ் செயுஞ்சமைய மென்றே**
**சிந்தை யிலுணரா**னண்ட கோடிக்குந்தேவ தேவை
யெந்தையை **நெல்லையப்பா வென்று முக்காற் கூப்பிட்டான்**

**எருக்கெழ வீசனிங்கேயிலை யெனச் சாபமிடல்**

உரத்தொடுமழைத்த வார்த்தைக்குத் தரமொன்றுங் கேளா
னெருக்கெழ வீசனிங்கேயிலை யெனச் சாபமிட்டே
மருக்கமழ் சோலை சூழுமானை மாநகரை நோக்கிப்
பொருக்கெனவெழுந்து ஞானபோதமர முனிவன் போனான்

## திருநெல்வேலியில்
## திருவருள் பெற்று விளங்கிய
## ஸ்ரீ நெல்லையப்ப பிள்ளையவர்கள் அருளிச்செய்த
## "திருநெல்வேலித் தலபுராணம்"

## கருவூர்ச் சித்தர் சருக்கும்

### ஆவணி மூலநாள் சுவாமி மானை மாநகர் வருகை

கோதிலாக் கருவூர்ச் சித்தன் கூறிய வார்த்தை கேட்டு
வேதன் மாலறியாப் பாதன் வேய்வனத்துறையுமெங்க
ளாதியான் விடைமீதேறி யாவணி மூலநாளின்
மாதவர் தேவர் சூழ மானை மாநகரில் வந்தான்

### நெல்லை நாதன் தரிசனம்

வித்துமாய் வித்தினூடே விளை பொருளாய் மேற்தோன்றுஞ்
சத்தியாய் நாதம் விந்தாய்ச் சரிக்குமைம் பூதமான
நித்தனைந் தொழில் செய்விக்கு நிரந்தர நெல்லை நாதன்
சித்தினோட சித்துச் சேராச் சிவானந்த மயமாய் நின்றான்

### சித்தர் அத்தரை காணல்

கண்டனன் கருவூர் சித்தன் கண்கணீர் கலுழச் சூழ்ந்தான்
றெண்டனிட்ட டடியில் வீழ்ந்தான் றிரும்பவு மெழுந்து நின்றே
பண்டுளவசம் போய்மேனி பரவசமடைந்தானுள்ளங்
கொண்ட பேரறிவினோடுங் குழைந்து தோத்திரங்கள் சொல்வான்

### சித்தர் சொல்லும் தோத்திரங்கள்

முத்தனே முடிவிலானே மூதண்டகோடிக் கெல்லாங்
கத்தனே கருணையானே கடவுளே யெல்லாம் வல்ல
சித்தனே கங்கைநீங்காச் சிரத்தனே சிவனே தேவே
நித்தனே நிமலா போற்றி நெல்லை நாயகனே போற்றி

சீலமார் ஞானபோதந்திரண்ட செஞ்சுடரே போற்றி
வாலை தாயிமைய மீன்ற வடிவொரு பாகா போற்றி
ஞாலமேழ் புரந்து செங்கோனடத்திய நம்பா போற்றி
நீலமார் களத்தாய் போற்றி நெல்லை நாயகனே போற்றி

**சித்தரிடம் பெருமான் வரம்கேள் என சொல்லல்**

என்று தோத்திரங்கள் செய்தே யிணையடி பணிந்து போற்றி
நின்றனன் கருவூர்ச் சித்த னிமலனுந் துதிகளெல்லா
நன்றென மகிழ்ச்சி கூர்ந்து நலம் பெறவுனக்கு வேண்டுந்
துன்று மெய்வரங்களுண்டேற் சொல்லெனத் தூயோன் சொல்வான்

**சித்தர் வரம் கேட்டல்**

நிருமலா நிருத்தா நித்தா நிரந்தரா நெல்லை நாதா
வருளொடு மானூர் தன்னிலாவணி மூல நாளிற்
கருதியென் முன்னே வந்து காட்சிதந்தனை நான் காண
வருடங்கடோறும் வந்து காட்சி நீ வழங்க வேண்டும்

## திருநெல்வேலியில்
## திருவருள் பெற்று விளங்கிய
## ஸ்ரீ நெல்லையப்ப பிள்ளையவர்கள் அருளிச்செய்த
## "திருநெல்வேலித் தலபுராணம்"

## கருவூர்ச் சித்தர் சருக்கும்

**கழைவனக் கடவுள் வரம் தருதல்**

என்னலு மகிழ்ந்து நெல்லையிறையவ னினிது நோக்கி
யன்ன நல்வர முந்தந்தோ மென்ற னனருண் மெய்ஞ்ஞானக்
கன்ன போதனை சொல் சித்தன் கழைவனக் கடவுளானைப்
பொன்னடி பணிந்து போற்றிப் பூசனை புரிந்தானன்றே

**நெல்லை நாதனார் பொன்னீதல்**

பூதிமெய்யடியார் போற்றிப் பூசை கொண்டருளி நெல்லை
நாதனார் போதும் போதினலம் பெறு கருவூர்ச் சித்த
னாதியான் மானூர் நண்ணற்கடிக் கொராயிரம் பொன்னீந்தே
நீதியாற் றானும் பின்னே நெல்லை மாநகரில் வந்தான்

**நெல்லை கோயில் வருதல்**

எண்டிசை யோரும் போற்ற **வெருக்கற வீசனிங்கே**
**யுண்டெனக் கருவூர்ச் சித்தனுரைத்துள** மகிழ்ச்சி கூர்ந்தே
வண்டணி குழலாடன்னை வடிவுடையவள் பொற்கோயிற்
புண்டரிகப் பொன் வாவிப் புனலிடை மூழ்கிப் போந்தே

**கருவூர்ச் சித்தர் அம்மை அப்பரை வழிபடல்**

சுந்தர வடிவாள் செய்ய துணையடிக் கமலம் போற்றிச்
சிந்தையன்புடனே மிக்க திருமூலத்தானம் போற்றி
யெந்தை வேய் முத்தைப் போற்றி யிதைய மன்புருகச் சூழ்ந்து
வந்தனவரத தானர் மலரடி வணங்கி வாழ்த்தி

**மீண்டும் சித்தர் மானூர் செல்லல்**

மற்றுமங்குள்ள தேவர் மலரடி பணிந்து போற்றிச்
சுற்றுநற் பிரகாரங்கள் சூழ்ந்து சன்னிதியில் வந்தே
கற்றைவார் சடையான் றன்னைக் கருதிநல் விடைகொண்டேகிப்
பொற்புறு சபையாலோங்கும் பொருவின் மானூரிற் போந்தான்

வந்துதான் கருவூர்ச் சித்தன் மகிழ்வொடு வாழுநாளி
லந்தணர் சிலர் தாங்கூடி யறிவிலாதகந்தை யாலே
நிந்தனை சொல்லக் கேட்டு நீதிசேர் மானூர் தன்னிற்
சந்த நான் மறையோர்க்கில்லந்தா னிலாவகை சாபித்தான்

தெருளறிவுடையோன் ஞானதேசிகன் கருவூர் சித்த
னிருளுடை மனத்தரானோ ரெவரு மஞ்சிடச் சாபித்தே
யருளொடு தழைத்த மானூரம்பலந்தனிலே யாடும்
பொருளையுட் கொண்டு போற்றிப் புகழொடு மினிது வாழ்ந்தான்

சோதியா னமலனெங்கோன் சுருதி நாயக னெல்வேலி
யாதியானாண்டு தோறு மாவணி மூலநாளி
னீதிசேர் மானூர் சென்று நிகரிலாக்காட்சி நல்கக்
காதலாற் கருவூர்ச் சித்தன் கண்டுள மகிழ்ச்சி கூர்வான்.

கருவூர்ச் சித்தர் சருக்கம் முற்றும்

--------------